

# கவிமுளரி®

மாதாந்த மின்னிதழ்

கவிதைகளின் வாசம்

ISSN 3021-6680

காலக்கோள் : 2023

Kavi Mulari Magazine

**வெளியிடுவோர் :**

விபுலானந்தர் கலை இலக்கிய மன்றம்,
பேத்தாழை, வாழைச்சேனை.

**பதிவு இல:** EP/CUL/BAT/VAL/03/69/2023

**இதழாசிரியர் :**

ஓவியர் மரகதம் பிரகாஷ்

**இணையாசிரியர் :**

கவிஞர், ஆசிரியர் திருமதி.விஜிதா முருகவேள்

**ஆசிரியர் குழு :**

கவிஞர் நவநிதன்
பிள்ளைக்கவி பிரசாந்
தமிழூராள் அனுஷ்திக்கா
தமிழ்மகள் அனுசதுர்த்திக்கா
கவிஞர், இளஞ்சைவப்புலவர் சிவநந்தினி
கவிஞர், இளஞ்சைவப்புலவர் ஜிதர்சினி
கவிஞர் யேசுசகாயம்

**செவ்விதாக்குநர் :**

கவிஞர், இளஞ்சைவப்புலவர் த.கி.ஷர்மிதன்

**அட்டை வடிவமைப்பு :**

கவிஞர், இளஞ்சைவப்புலவர் த.கி.ஷர்மிதன்

**ஆலோசகர்கள் :**

எழுத்தாளர் ஜிஃப்ரி ஹாசன்
கலாநிதி மணிக்கூகவி நஸீரா எஸ் ஆப்தீன்
கவிஞர், கலாபூசணம் முத்துமாதவன்
எழுத்தாளர், கலாபூசணம் மெத்தியேஸ்

புதிய ஆக்கங்கள் வரவேற்கப்படுகின்றன.

படைப்புகளை அனுப்புவோர் கவனிக்க வேண்டியவை :

- கவிதைகள் மட்டுமே அனுப்பலாம்.
- ஒருங்குறியில் (Unicode font) தட்டச்சு செய்து அனுப்ப வேண்டும்.
- படைப்பாளர் படைப்பின் கீழ் தமிழில் பெயரையும், மின்னஞ்சல் முகவரியையும் இட்டு அனுப்ப வேண்டும்.
- ஆக்கம் தனது சொந்தப் படைப்பு என்பதை உறுதிசெய்தல் அவசியம்.
- புகைப்படம் இணைத்து அனுப்பலாம். (நாகரிகமானதாக இருந்தால் மட்டுமே இணைக்கப்படும்)
- ஒவ்வொரு மாதமும் 15 ஆம் தேதிக்குள் ஆக்கங்கள் அனுப்பிவைக்கப்படல் வேண்டும்.
- ஒருவர் எத்தனை ஆக்கங்களும் அனுப்பலாம்.
- ஆக்கங்கள் அடுத்தடுத்த இதழ்களில் பிரசுரிக்கப்படும்.
- மின்னஞ்சலுக்கு அனுப்பப்படும் ஆக்கங்களே இதழுக்கு ஏற்கப்படும்.

.......................................

ஆக்கங்களை அனுப்ப

editor2023kavimulari@gmail.com

படைப்புகளுக்கு படைப்பாளிகளே பொறுப்பாவர். இதழாசிரியர் பொறுப்பல்ல.
ஆக்கங்களைச் செவ்விதாக்கம் செய்வதற்கு ஆசிரியர் குழுவிற்கு உரிமையுண்டு.

"எழுதுகோல் புரட்சி
எங்ஙனும் எழும்பட்டும்
விழுதென விடுதலை
சமூகத்தில் நிலைக்கட்டும்"

**நற்கவிகளுக்கு**
**வணக்கம்,**

வாழைச்சேனை பேத்தாழையைத் தளமாகக் கொண்டு இயங்கும் விபுலானந்தர் கலை இலக்கிய மன்றத்தின் முயற்சியாகக் 'கவிமுளரி' எனும் கவிதைசார் மின்னிதழ் வெளிவருகிறது.

பிரதேச கவிஞர்களுக்குக் களம் கொடுப்பதும் அவர்களின் எழுத்தாக்க முயற்சிகளுக்குக் கரம் கொடுப்பதும் எமது பிரதான அவா.

அதன்வழியில்,
கன்னி இதழ் வெளிவந்தது. அதற்கு நீங்கள் வழங்கிய ஆதரவிற்கு மேலான நன்றி. தொடர்ந்தும் ஆதரவளிப்பீர்கள் என நம்புகின்றோம்.

இதழில் பங்குபெறும்
கவிஞர்கள் யாவர்க்கும்
வாழ்த்துகள்.

சிலரது கவிதைகள் இடம்பெறாமல் போயிருக்கலாம். அவர்களது கவிதைகள் தொடர்ந்து வரும் இதழ்களில் நிச்சயம் வெளிவரும்.

தொடர்ந்தும் உங்கள்
பேராதரவை வேண்டும்,

உங்கள்,
-இதழாசிரியர்

2024-03-25

# கவிமுளரியில் வாசம் வீசும் கவித்தாதுக்கள்

- 👉 கவிஞர் ரவிகிருஷ்ணா
- 👉 கவிஞர் மன்னைத் தமிழ்த்தோன்றல்
- 👉 கவிஞர் வாழையூர் அபி
- 👉 கவிஞர் க.த.யேசுசகாயம்
- 👉 கவிஞர் இர்ஷாத்
- 👉 கவிஞர் ஓ.சா
- 👉 கவிஞர் இரா.நிதன்
- 👉 கவிஞர் நி.நிறோஜினி
- 👉 கவிஞர் சரஸ்வதி பாஸ்கரன்
- 👉 கவிஞர் அழகையா சிவநாதன்
- 👉 கவிஞர் பிள்ளைக்கவி பிரசாந்
- 👉 கவிஞர் தமிழூராள் அனுஷ்திக்கா
- 👉 கவிஞர் இரவிகாந்தன்
- 👉 கவிஞர் தாழையூர் யதுர்ஷிகா
- 👉 கவிஞர் சஜிரேக்கா சுதாகரன்
- 👉 கவிஞர் கௌ.நந்தினி
- 👉 கவிஞர் மன்னனூர்ப் பாரதி
- 👉 கவிஞர் தமிழ்மகள் சதுர்த்தி





# -தமிழ்த்தாய் வாழ்த்து-

நீராருங் கடலுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகுஞ்
சீராரும் வதனமெனத் திகழ்பரத கண்டமிதில்
தக்கசிறு பிறைநுதலுந் தரித்தநறுந் திலகமுமே
தெக்கணமு மதிற்சிறந்த திராவிடநற் றிருநாடும்
அத்திலக வாசனைபோ லனைத்துலகு மின்பமுற
எத்திசையும் புகழ்மணக்க விருந்தபெருந் தமிழணங்கே, (௧)

பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கினுமோர்
எல்லையறு பரம்பொருள்முன் னிருந்தபடி யிருப்பதுபோல்
கன்னடமும் களிதெலுங்குங் கவின்மலையாளமுந்துளுவும்
உன்னுதரத் துதித்தெழுந்தே யொன்றுபல வாயிடினும்
ஆரியம்போ லுலகவழக் கழிந்தொழிந்துசிதையாவுன்
சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே. (௨)

~மனோன்மணியம் சுந்தரம்பிள்ளை.



# வெற்றியும் தோல்வியும்

–கவிஞர் ரவிகிருஷ்ணா
கிரான்குளம், மட்டக்களப்பு.

வெற்றிகள் நிலைப்பதில்லை
தோல்விகள் தொடர்வதில்லை
வெற்றியால் மகிழ்கிறோம்
தோல்வியால் கற்றுக்கொள்கிறோம்
வெற்றி கண்டவர்க்கு
ஒரு பயணம்
தோற்று நின்றவர்க்கு
பல பயணம்

வெற்றியால் அனுபவமும்
ஒன்றாகிறது
தோல்வியால் அனுபவம் பரந்து
செல்கிறது
தோல்வி என்பது நிரந்தரமில்லை
வெற்றியென்பது நீண்டு
நிலைப்பதுமில்லை

பூவை எடுத்துக்கொள்வோம்
அழகாய்ப் பூத்த பூ பறிக்கப்படுகிறது
ஆனந்தமாய் நாளைக் கழிக்கிறது
மற்றைய பூக்கள்
இங்கு வென்றது யார்?
தோற்றது யார் ?





# வெற்றியும் தோல்வியும்

-கவிஞர் ரவிகிருஷ்ணா
கிரான்குளம், மட்டக்களப்பு

சிலவற்றுக்கு தோல்வியும்
அவசியமாகிறது
அவற்றின் வாழும் நாட்களை
நீடித்துக் கொள்வதற்கு
அழகானதை ஆயிரம் கண்கள்
பார்க்கும்
அழகிழந்ததைச் சில கண்கள்
நோக்கும்

ஆலம் பழம் அழகானதுதான்
கண்களுக்கு
பிட்டுப் பார்த்தபின்
தோல்வி நம்
எண்ணங்கட்கு

சிந்தையில் வருவதெல்லாம்
வெற்றிக்கு அடையாளமா?
சீரழிந்து போவதெல்லாம்
தோல்விக்குப் பூர்வீகமா?

முயன்றால் வெற்றி
இல்லாவிட்டால் பயிற்சி
தொடர்ந்து தொடரட்டும்
கற்றுக்கொண்ட பாடமாய்
என்றும் எங்கள் முயற்சி.





# எந்தமிழர் வீறு...வீறு...

ஏட்டினிலே எந்தமிழாம்
ஏட்டையுடன் பாடிடுவோர்
எவருண்டு இன்றையநாள்
கூறு கூறு!
நாட்டமுடன் நந்தமிழாம்
நாட்டிலுள்ளோர் கற்றிடவே
நாற்றிசையும் உழைப்போரைப்
பாரு பாரு!!

தீட்டிடுவோர் படைப்பெல்லாம்
திட்டமிட்டுப் போற்றிநிற்கும்
தீவிக்குடி என்றுணர்ந்தோர்
யாரு யாரு!
வாட்டமுற்ற வண்டமிழர்
வேட்கையுடன் ஏற்றம்பெற
வயமானாய்ப் பாய்ந்திடுவார்
சேரு சேரு!!

கேட்டினுள்ளே வாழ்ந்திறக்கும்
கூட்டமில்லை என்றுரைக்க
கூடிடாதோர் இனமல்ல
வேறு வேறு!!
ஆட்டமிட்டு எக்களிப்போர்
பாட்டையெலாம் ஈர்ந்திடவே
அணியாகும் எந்தமிழர்
வீறு வீறு!!

-மன்னைத் தமிழ்த்தோன்றல்
தமிழ்நாடு.







# எந்தமிழர் வீறு...வீறு...

-மன்னைத் தமிழ்த்தோன்றல்
தமிழ்நாடு.

ஊட்டிடவும் மொழிப்பற்று
மூட்டிடவும் இனப்பற்று
உதவாது தடைசெய்வோர்
கீறு கீறு!!
பூட்டிவைக்கும் பெண்ணினத்தை
மீட்டெடுக்கப் பாட்டிசைக்கும்
பாவலனாய் இனியேனும்
மாறு மாறு!!

ஈட்டிடுவோம் வெற்றியெனச்
சாட்டிடாதோர் இத்தரையில்
ஈயுவனார் தோன்றலெனில்
ஊறு ஊறு!!
சூட்டிடுவோம் மணியாரம்
காட்சிசெயும் பாவலர்க்கு
சோதியெனப் பூசிடுவோம்
நீறு நீறு!!





# இதயத் தொலைபேசி...?

-வளர்கவி
வாழையூர் அபி.

என் இதயத் தொலைபேசி
அங்கலாய்க்கிறது...

நீ யாரென அறியாமல்...

அறிந்தும், கூறத் தெரியவில்லை.

என் இதய மெமரியில்
சிந்தனைகள் பல கூப்பாடிடுகின்றன...

கூப்பாடிடும் சில உறவுகள்
சில்லறைகளாக
அங்குமிங்கும் தளம்புகின்றன...

தளம்பும் உறவுகளின் தேவைகளுக்கென
ஓரிரு குறுஞ்செய்திகள்
மாறாமல் திரையை வந்துதட்டுகின்றன...

தட்டிடும் போலி வார்த்தைகளை
தசநூறாய்க் கடப்பது
எனக்கு வேடிக்கையாய்ப் போய்விட்டது...

வேடிக்கையாய்ப் போவதே
இங்கு பலருக்கும்
வாடிக்கையாய்ப் போய்விட்டது...





# மாண்புக்குப் பெயர் மாதர் குலம்

(அறுசீர் விருத்தம்)

-தமிழ்ப்புதல்வன்
க.த.யேசுசகாயம்
கிரான்.

கூட்டில் வாழும் புள்ளினத்தில்
கூட்டுப் புணர்ச்சி கிடையாது
காட்டில் வாழும் விலங்கினத்தில்
காணத் தகுமோ வன்புணர்வு
கூட்டுப் புழுவாய்ப் பெண்டிரையே
குறைத்து என்றும் எண்ணாதீர்
கேட்டுக் கொள்வீர் மானிடரே
கேலி இனியும் செய்யாதீர்.

அடுப்பை ஊதும் பெண்களுக்கு
அறவே வேண்டாம் பெண்கல்வி
எடுத்துக் கூறிய பெரியோர்கள்
எங்கோ மறைந்து போனாரே?
கடுப்பை என்றும் காட்டாது
கருணை கொள்வோம் அவரிடத்தில்
துடுப்பைத் தேடும் படகாகத்
துணையாய் வேண்டும் பெண்குலமே.

குடும்பம் தன்னைக் காத்திடுவாள்
குலத்தைக் காக்கும் தெய்வம்போல்
இடும்பைக் கண்டு அஞ்சாமல்
எதிர்த்து நீச்சல் போட்டிடுவாள்
உடும்பைப் போன்றே உள்ளத்தில்
உறுதி கொண்டு வாழ்ந்திடுவாள்
கொடுமை பலவும் தாங்கிடுவாள்
கொஞ்சும் மழலை வளர்ந்திடவே.





# மாண்புக்குப் பெயர் மாதர் குலம்

(அறுசீர் விருத்தம்)

-தமிழ்ப்புதல்வன்
க.த.யேசுசகாயம்
கிரான்.

எண்ணம் தன்னில் அனுதினமும்
எளிமை கொண்டு வாழ்ந்திடுவீர்
பெண்ணின் மகிமை பாடாது
பெருமை வந்து சேராது
மண்ணில் வாழும் மானிடரே
மங்கை குலத்தைக் காத்திடுவீர்
கண்ணைக் காக்கும் இமைபோல
கருத்தாய்ப் பெண்ணைக் காப்போமே.

வீட்டில் வேலை செய்தவர்கள்
விண்ணில் பறந்து செல்கின்றார்
ஏட்டுக் கல்வி கற்றதனால்
ஏற்றம் பலவும் பெற்றார்கள்
நாட்டில் நிலவும் வன்முறைகள்
நாளும் குறைய வழிவகுப்போம்
பாட்டில் மட்டும் பாடாமல்
பாங்காய் வாழ்வில் போற்றிடுவோம்.





# கலல் நதி

– இர்ஷாத்
வாழைச்சேனை.

கடல் மேல்
பறவை நிழல்போல்
உன் ஞாபகநோய்
எனைக் கொல்கிறது

நான்
வாடகை வீட்டில்
வசிக்கிறேன்
காலம் முடிந்ததும்
உன்னிடம் சொல்லாமலே
பயணமாகி விடுவேன்
யாராலும்
நிறுத்த முடியாதது
என் பயணம்

நீ
மரத்தில் கனிந்த
கனிபோல்
இனிக்கிறாய்
நான் உன்
வசந்தத்தின் நிழலில்
சிறு பறவைபோல்
இளைப்பாறிச் செல்கிறேன்
திரையிட்டுச் செல்பவளே சொல்
உன் ஆடைகளுக்குத் தெரியாமல்
எப்போதாவது உன்னை
மறைத்ததுண்டா?

என் இரத்தத்தைக்
குடித்து வளரும்
கவிதை நீ
எவ்வளவு குடித்தாலும்
நான் இறப்பதே இல்லை

நான் பிறந்ததும்
பிரிவதும்
இறப்பதும்
உன்னை
அடைவதற்குத்தான்.



நானும்
ஓர் வழிதவறிய ஆட்டுக்குட்டிதான்
மேய்ப்பனின் குழலோசை
அவளாக
இருந்திருக்காவிடின்.
✶✶✶
அவள்
எதிர்பார்ப்பின் பெருந்தாகத்தில்
நீந்திக் கிடக்க
எனக்கென்று
ஓர் கடலை சிருஷ்டிப்பாள்

என் கடலுக்காய்
ஓர் வானம் செய்து
நட்சத்திரங்களைக் காணிக்கையாக்கி
இரவுக் குறிப்புகள் நெடுகிலும்
அவளை
தேவதையாக்குவேன்.
✶✶✶
அசடர்களின்
கண்ணீரைப் பலிகேட்கும்
அவள் புன்னகைதான்
வேட்டைப் பறவைகளின்
இறகுகளை
முத்தமாக பெற்றெடுத்தது.
காலம் தன் பட்டறையில்
சிறகுகளை
பதமாகக் கூர்தீட்டித் தந்தது
பறப்பதற்கு.

நம்பித் தொலையுங்கள்
அவள் தேவதையேதான்
பிரியும்போதும் கூட
யாரிடமும் சொல்லிக்கொண்டு போகவில்லை..



# தேவதைகளுக்கு இலக்கணம் இல்லை...

-ஓ.சா
களுவன்கேணி, மட்டக்களப்பு.





# அவள் தான்...

-இரா.நிதன்
மட்டக்களப்பு

நானெழுதும்
புதுக்காவியமவள்
நானியற்றும்
புதிய நாவலவள்
நான் நினைக்கும்
யோசனையவள்
நானிசைக்கும்
மோகனமவள்...

ஓசையாகிப் போன
தாலாட்டுமவள்
ஒத்திகை பார்த்திடாத
ஓவியமுமவள்
ஒவ்வொன்றாக வர்ணிக்கும்
ஒருவரிக் கவியவள்
ஒருவரும் எதிர்த்திடாத
ஓர் எழுச்சியுமவள்...

என்னை எப்போதும்
இயற்றுபவளவள்
எண்ணில்லாப் பெருமையிலும்
இன்னிசையவள்
எதுகை மோனையென்றால்
எங்குமவள்
எதிலும் உறைந்துவிட்ட
தமிழ்மகளவள்...





# பெண்மை

-வாழையூர்
நி.நிறோஜினி.

மழலையாகத் தாயவளின் மடி தவழ்ந்து
பிள்ளையெனத் தரணியில் கால் பதித்து
மங்கையாக வளர்ந்து அறிவு எனும்
ஆழியில் அலைகளாக மிதந்து
மன்னவன் கைகளில் சேர்ந்து
தாய்மையில் அகம் மகிழ்ந்து
மறுபிறவியாக மழலையைக் கரங்களில்
ஏந்தி இரு கண்களாக வளர்ப்பவள்

மனையாளாக மனை காத்து
அனைவரின் நலம் பேணியவளவள்
மண்ணில் பல கனவுகளைச் சுமந்து
வந்தவளின் மனம் மறுக்கப்பட
மலையளவுச் சுவர்களைத் தகர்த்து
சிகரம் தொட வானாக உயர்ந்தாள்
மழையெனப் பூமியை நனைத்தவள்
உதயவனின் உஷ்ணம் கொண்டெழுந்தாள்

மலரின் மென்மை உடையவள் ஆனாலும்
அவனியில் களைகளைக் களைந்திட
பெண் எனத் தோன்றியவளின் பெண்மையின்
மகத்துவம் வானளவு என உணர்ந்திடுவோம்.





# மகளிரெனும் மாபெரும் சக்தி

## (எண்சீர் விருத்தம்)

-கவிமாமணி சரஸ்வதி பாஸ்கரன்
தமிழ்நாடு.

பெண்களாகப் பிறந்துவிட்டால் சாபக் கேடா?
பெண்ணினமும் வலிகளினைத் தாங்கும் கேடா
கண்களெனப் பெண்களையும் மதிப்போர் இல்லை
காளையர்க்கே அடிமையாக ஆக்கல் நன்றா?
மண்ணுலகில் சுமைதாங்கும் பெண்கள் என்றும்
மாசற்ற மாதாவே உணர்வீர் நீங்கள்
திண்ணமாகச் சொல்லுகின்றேன் சுமையும் தாங்கும்
திறமையினைப் போற்றிடுங்கள் நாளும் இங்கே.

உண்மையினைச் சொல்லுவதால் தயக்கம் இல்லை
உயிர்ப்பாலாய் உதிரத்தைத் தந்த தெய்வம்
கண்களிலே கண்ணீரும் பெருக்கெ டுத்தால்
காசினியும் சிறந்திடுமா நீரே சொல்வீர்?
விண்ணுலகம் செல்லுகின்ற வரைக்கும் பெண்கள்
விடியலினைக் காணுதற்கு வாய்ப்பே இல்லை
எண்ணங்கள் சரிதானா சிந்திப் பீர்கள்?
ஏற்றங்கள் பெண்மைக்கு வேண்டும் வேண்டும்.

வாழ்த்துகளை மகளிர்க்குச் சொல்லு கின்றேன்
வரமாக ஆண்டவனின் பிறப்பே யன்றோ
ஆழ்மனத்தில் தம்சுற்றம் தன்னை எண்ணி
அயராது பேணுகின்ற தாயாய் நிற்பாள்
மூழ்கிடுவர் சமுதாய நலத்தை எண்ணி
முனைந்திடுவர் உயர்வான கொள்கை கொண்டே
தாழ்ந்திடுவர் அன்பான உறவைக் காக்க
தன்மானம் மாறாது பயணம் செய்வர்.



# மகளிரெனும் மாபெரும் சக்தி

## (எண்சீர் விருத்தம்)

-கவிமாமணி சரஸ்வதி பாஸ்கரன்
தமிழ்நாடு.

வாழ்த்துகளை மகளிர்க்குச் சொல்லு கின்றேன்
வரமாகப் பிள்ளைகளைப் பெற்றா லன்றோ !
பாழ்பட்ட சமுதாயம் என்றும் நன்றாய்ப்
பாரினிலே மேன்மையுற உழைத்த தெய்வம்
ஆழ்நெஞ்சம் முழுமையுமே உறவின் கூட்டம்
அழகான குடும்பத்தின் ஆணி வேராம்
காழ்ப்புணர்ச்சி ஏதுமின்றிக் காக்கும் உள்ளம்
காசினியில் என்றென்றும் வாழ்க வாழ்க.

பெண்ணுக்கு நிகராக யாரு மில்லை
பேணுகின்ற சக்தியவள் உண்மை உண்மை
கண்போன்றே காத்திடுவாள் மக்கள் தம்மை
காசினியும் உய்கின்ற வகையில் வாழ்வாள்
எண்ணங்கள் சிறந்தோங்க வாழும் நங்கை
எத்திக்கும் விளைவுகளும் அமையும் நன்றாய்
பண்பான நெறிமுறையில் பாசம் காட்டும்
பாரினிலே சான்றாக வாழ்வாள் வாழ்க.

வீரத்தின் விளைவிடமாய் பெண்ணே நிற்பாள்
வித்தகிக்கு மாற்றாக யாரு மில்லை
தீரத்தில் பெண்ணுக்கே ஒப்பார் இல்லை
திறமைகளின் விளைநிலமாய் திகழ்வாள் மங்கை
பாரத்தைத் தாங்குகின்ற வீரம் தன்னில்
பரவசத்தைக் கண்டிடலாம் குடும்பம் தன்னில்
தாரமாகத் தாயாக அக்காள் தங்கை
தாரணியில் பெண்ணன்றோ சக்தி யானாள்.





# என் மகளே!

-அழகையா சிவநாதன்
கோட்டைக்கல்லாறு-02.

ஒற்றைத் துளி உருவம் கொடுத்தது
கருவறையோ வாழ்விடம் கொடுத்தது
மாயா ஜால உலகம் அது
விந்தைகள் பலவும் கற்றுக் கொடுத்தது

கருவறையோ காரிருள் சூழ்ந்த மேகம்
கணப்பொழுதில் மாறிவிடும் எனும் மாறா வேட்கை
காதருகே ஞாலம் காண வருவாள் கற்பகமே
எனப் பறைசாற்றும் எனைச் சுமந்தாள் கதறல்

உலகதனில் பிண்டமாய் விழுந்துவிட்டேன்
கருவறையில் இருப்பது போன்றே உணர்வு
கண்ணெதிரே நான் காணும் காட்சியெல்லாம்
காரிருளாய் மாறியதன் விந்தையறியேன்

நாடுகளோ? காடுகளோ? வீடுகளோ?
மரங்களோ? செடிகளோ? கொடிகளோ?
அறங்களோ? மறங்களோ? தரங்களோ?
தாய் முகமும் நானறியேன் என் மகளே

ஒன்றென்றும் ஆறென்றும் பத்தென்றும்
என் வயசு நீண்டு கொண்டு போயிருக்க
ஆண்டவன்தான் உன் தகப்பன்
என் மீது பற்றுக்கொண்டான்

பற்றுண்ட காரணத்தால் நாம்
பல நாட்கள் களித்திருந்தோம்
பாவம் பாவியவன் உன்னைத் தந்துவிட்டு
இடைநடுவே இறைவனடி சேர்ந்துவிட்டான்



# என் மகளே!

-அழகையா சிவநாதன்
கோட்டைக்கல்லாறு-02.



கல்லுடைத்தேன் கற்புடைக்கச் சித்தமின்றி
பூ மாலைகள் தான் தொடுத்து
ஆலய வீதியோரமாய் இன்றுவரை
பூ விலைகள் கூவி வந்தேன்

மனதினிலே அறிந்த காயங்கள் சில
மறந்த காயங்களோ பலவடி
உன் மழலை மொழி கேட்டு வடுக்களின்
கசடுகள் ஆற்றி வந்தேன்

ஊசி கொண்டு மலர் புனையும் நாட்களிலே
பேனை கொண்டு பயிலவும் அனுப்பிவிட்டேன்
மாதங்கள் அத்தனையும் கட்டணங்கள் செலுத்தியுனை
கற்பகமாய் ஆக்கிவிட்டேன், வாழி நீ!

உன் வனப்பு செல்லக்கை சொல்லக்
கேட்டிருக்கன் என் மகளே! எனக்கு
ஒலியாய் நீ இருந்தாய் ஒளி தருவாய்
என்றெண்ணி இதுவரையும் காத்திருந்தேன்

நீ என்னிடம் மடல் செல்லாத்
தாள் படிக்கையிலே
இருள் என் உடல் என்று
புரிந்து கொண்டேன் என் மகளே!

ஆலயத்துள் இருப்பவனும்
சுயநலமி போலும்
என்னை...??





# பெண்ணெனும் பேருளி

-பிள்ளைக்கவி பிரசாந்
கின்னையூர்.

மங்கை எனும் சொல்லே
மணக்க நல் மகளாய் வந்து
கங்கையும் பல அவள் பேரே கொண்டு
அங்கம் முழுதும் அன்பினால்
அரசாளும் நாயகி
பெண்டிர்க்கு வான் சொல்லியும் தீருமோ
மாதரவள் பெருஞ்சிறப்பு
உலகின் இயக்கமும் உணர்வின் தொடக்கமுமாய்
அனைத்திலும் விஞ்சி நிற்கும் வித்தகைகள்
ஒழியாத புகழ் காவியம்தான்.....
புகழ்

புணர்ந்திட மட்டுமே பெண்கள் என்றும்
பூட்டியே மறைத்திடும் பறவை என்றும்
சிறகுகள் சிதைத்து
சேர்வதிலும் செயல் செய்வதிலும்
தவறு தவறு என்று ஓலமிட்டு
பெண் தட்டிக்கழிக்கப் படுவதிலும்
குரல் ஏறும் கணத்தினில்
கும்பலாய்க்கூடி அவளைக்
கூனிக்குறுக வைக்கும் நகைப்பினிலும்
அவளுக்கான உரிமை
எழுத்தில் மட்டுமே என
வீட்டிலும் நாட்டிலும் உணர்த்தும்
ஈனச்செயல்களும் அவள் உள்ளத்தின் புன்மைக்கு
அடிநாதமாகி ஆழப்புதைந்த அடிமை விலங்கு
துருப்பிடித்தும் துண்டாக்கப்படாமல்
பெண்ணவள் கழுத்து நெரிக்கும்
உணர்வுப் புண்களே
புன்மை



# பெண்ணெனும் பேருளி

-பிள்ளைக்கவி பிரசாந்
கிண்ணையூர்.

கோளரியாய்க் கொடும்பாவிகள் கருவறுக்க
மென்மை வாள் சற்று உள்ளத்தில் அமர்த்தி
மின்னல் வாள் செய்கையில் திறக்க
ஏட்டிலும் எழுத்திலும் அன்றி
தீட்டும் தீப்பொறி பெண் திமிர்
திசை எட்டும் கடந்து அகிலம்தாண்டிய
அண்ட ஆளுகைக்கு
மரபுக்குள் இருந்து மீள
முதல் பெண் முன்வர வேண்டும்
மனதுக்குள் நிறைந்த அவள் ஆசைகள்
களம்காண வேண்டும்
அடக்கி ஒடுக்க பெண் அடிமையுமல்ல
அடித்து வீழ்த்த அவள் நாணலும் அல்ல
பேதைமை நீக்கிய பேதையை
எந்தப் பேய்களும் ஒடுக்குதல் இயலாது
நாளையை நோக்கிய தாய்மைக்கு
என்றும் மாறாத ஆயுதமே
புரட்சி

புணர்தலுக்கு மட்டும் அல்ல,
பெண் உணர்வுக்கும் உயிருண்டு
என்பதைச் சிந்தியுங்கள்
புகழ், புன்மை, புரட்சி என
மூன்றையும் தாங்கிச் சுழலும்
பெண்ணெனும் பேருளிக்கு
பாரில் மட்டுமல்ல,
பாவியர் பார்வையிலும்
நிலையான ஓர் நிலை வேண்டுமென்று உணருங்கள்.





# கவிதை

-தமிழூராள் அனுஷ்திக்கா

கலைகளுள் தலையாய்க்
கலங்கரை விளக்காய்
காலங்கள் தாண்டியும்
கருத்தாய் இருந்திடும்

எழுத்துக்களால் உணர்வுகளுக்கு
உயிர் கொடுக்கும்
சமூகச் சிக்கல்களைச்
சீர்ப்படுத்தும்

சந்தம் போட்டு
எழுதும் போது
சிந்தை கவர்ந்து
சிந்தனைப் பதியும்

எதுகை மோனையில்
எவரையும் பிடிக்கும்
அணிகளின் சேர்க்கையால்
பொழிவுடன் திகழும்

குறியீடுப் பாங்கு
ஓங்கி உரைத்திடும்
படிம உத்தி
சித்திரமாய்ப் பதிந்திடும்

சமூகத் தள்ளாட்டத்தைக்
காலத்தின் கண்ணாடியாய்
நின்று உணர்த்தும்
நன்று உலுக்கும்

பொருட் செழுமையும்
இலக்கியச் செழுமையும்
இணைந்து கொழுத்தும்
இதயத்தை இதமாக்கிடும்

தம்பதியினர் நிலை கடந்து
மழலையால் பெருமை கொண்டு
பெற்றோராகும் நிலை போல
மனிதரில் கவிஞர்கள்





# ஒத்திகை

-இரவிகாந்தன்
திருகோணமலை.

ஆரம்பத்தில் அவளிடம்
இருந்தது எல்லாம்
கொஞ்சம் கேள்விகளும்
கொஞ்சம் பதில்களும்

விருந்தினர் வீட்டுக்கு வரும்
பொழுதெல்லாம்
புதிய வினாக்களையும்
புதிய விடைகளையும்
தயாரிக்கத்
தொடங்கிவிடுவாள்

சந்திக்க
வருபவர்கள்
கேள்விகளையோ
பதில்களேயோ அவளிடம்
எதிர்பார்க்கவில்லை

ஒவ்வொரு முறை
வந்தவர்களும்
திருப்தி அற்றே
திரும்பி போனார்கள்
பாதிப் பேருக்கு
பரிமாற தகுதியற்றவள்
மீதி பேருக்கும்
பரிமாறித் தொடர்ந்தாள்
தன் அன்பை





# ஒத்திகை

-இரவிகாந்தன்
திருகோணமலை.

கொஞ்சம் கொஞ்சமாக
சேர்ந்த
கேள்வியும் பதில்களும்
கொஞ்ச நஞ்சமல்ல

அவளை
ஒரு மழை நாளில்
விருந்துக்கு
அழைத்தார்கள்
தனியாக போன
அவளிடம்
நனைவதற்கு குடை
இல்லை
நனைந்தே போனாள்
போனதால்
திருப்பி அனுப்பினார்கள்
போகாவிட்டால் திரும்பி
அழைப்பார்கள்

நிராகரிப்பும் அவளுக்கு
திருப்தி அளித்தது
திரும்பி வரும்போது
அவள் நடந்த நிலத்தின்
ஈரம் காய்ந்து போயிருந்தது

திருட்டுக்கு ஒத்திகை
திரும்பத் திரும்ப
பெண் பார்க்க.



# பேதையின் குமுறல்

-தாழையூர் யதுர்ஷிகா

புரையோடும் கெடுதி சமூகத்தில்
பெண் என அச்சிட்டு
தகுதி எய்த நீ தகுதியற்றவள்
என முடக்கி விடுகிறது
இந்த உலகம்

அற்பரின் இச்சைக்கு
பட்டாம்பூச்சிகள் தினம் தினம்
சிறகிழந்து நடை பிணம்
எய்துவதேனோ?

பட்டினி கிடந்து
பசியால் மெலிந்து
உற்றம் நோக்கினும்
“இது உனது கடமைதானே” என
கழுவேற்றுவது ஏனோ?

வேட்கையின் வாசலை
எட்டிப் பார்க்கக் கூட
எளிதில் முடிவதில்லை
காரணம் “அவள் ஆம்” அவள்

சாதிக்க துடிக்கும் தையலோ
தனது உலகம் இதுவென அறியாது
அடுப்பங்கரையைச் சுற்றி வலம்வருவது
தகுமா?





# பேதையின் குமுறல்

-தாழையூர் யதுர்ஷிகா.

ஆசைகள் அவளுக்கும் உண்டு
கனவுலகில் நிறைவேற்ற மாத்திரம்
பேதையாய்ப் பிறந்தால்
பேதமைப் பட்டமும்
இனாம் தானே

குருதியைப் பாலாக்கி
குடித்து ஏறிய மாந்தர்க்கு
கன்னியின் மாதவிடாயோ
தீட்டாகி முகம்சுழித்து
புறம் ஒதுக்குவது ஏனோ?

உயிரின் தோற்றமாய்
உலகிற்கே இறையாய்
தாங்கி நிற்கும் தாரமாய்
தட்டிக் கொடுக்கும் தோழியாய்
தங்கையாய்த் தமக்கையாய்
இடம் வகிக்கும் அவளை
கூண்டுக்குள் பூட்டி
கண் கட்டி விட்டது ஏனோ?

மங்கையராய்ப் பிறக்க
மாதவம் செய்திடாய்
மங்கையராய்ப் பிறப்பதே
நல் மாதவம்தானே.





# ஊடல் கொண்ட ஒளி...

-சஜிரேக்கா சுதாகரன்
(பள்ளியூராள்)
பள்ளிக்குடியிருப்பு, மூதூர்

தினம் ஒரு திருப்பம் கொண்டு
திண்டாட வைத்திடும் வாழ்க்கை

கண்ட நொடி முதல்
கண்ணீரின் வலி உணர்ந்து

இருளான பிரபஞ்சத்தில்
விலக்கி விடப்பட்ட விடியல் நான்

சிந்திக்கத் தெரியாத நிமிடங்களில்
சிதறவிட்ட சிந்தனையின் முடிவுகள்

முடிவுகளால் முந்திக் கொண்ட
ஏமாற்றங்கள் கவலைகள்

கண் விழிக்கும் பொழுதுகளில் எல்லாம்
குருடனாய் உணர்ந்தேன்

முறையற்ற இடத்தில் கொட்டிவிட்ட
முறை கொண்ட என் பாசத்தினால்

என் வாழ்வின் வாசல்கள் மூடிக் கிடக்கின்றன
சாவிகள் தொலைந்த நிலையில்

மதியினால் வெல்ல நினைத்து முடியவில்லை
மானம் கெட்ட மனது கொண்ட பாசத்தினால்

இருளிலே இன்பக் கனவு காணும்
சொர்க்க நிலை எனக்கில்லை

நான் வரைந்த வாழ்க்கை எல்லாம்
கானலாய்க் கரைந்தோட

நீட்டிய சிறகுகளை உதைத்து பார்க்க முடியாமல்
சிறகொடிந்த சிட்டாய் நான் சிதைவடைந்து கிடக்கின்றேன்

ஒளிகூட ஊடல் கொண்டது
இருட் கிடங்கில் தள்ளிவிட்டு.





# கைம்பெண்

-கௌ.நந்தினி
பாசிக்குடா.

வறுமையின் கொடுமை தாங்காது
தண்ணிளமையை ஒருவரிடம் விற்றிட
ஆடவனொருவனின் கைசேர்ந்தால்
பேதை ஒருத்தி

தான்பட்ட துன்பத்தை மறந்த அவளோ,
தன் மகளும் அனுபவிக்க போவதை
அறியாதவளாய்
இன்னொரு ஆடவனின்
கைகோர்த்துவிட்டாள்

காலங்கள் கடந்தோட....
வயிற்றில் பசியும் நெஞ்சில் வேதனையும்
இடுப்பில் குழந்தையுமாய்
மடியில் சுமையுடன்
வாசற்படி நின்றாள்
மீண்டும் தன் தாய்க்கு குழந்தையாய்
கசங்கிய கண்களுடன்...அவள்

தாரம் மாண்டால் மறுதாரம் தேடும்
ஆண் வர்க்கத்தை
"பாவம் அவன் தனியாக ஏது செய்வான்
என்பாள்" அவன்தாய்.
ஆனால்,
குழந்தைகளுடன் தனியாக இருப்பவளைப்
பாவம் பார்க்கத்
தாய்கூட அஞ்சுவாள்
குறை கூறும் சமூகத்தை சிந்தித்து...

தாயே,
நீயேனும் பெண்ணுக்கு சுதந்திரம் கொடு,
பெண்ணடிமையின் கொடுமையை
அப்போது வெல்வாள் கைம்பெண்.







# நாளைய தமிழும் தமிழரும்

கவிஞர்.மன்னனூர்ப் பாரதி

தமிழினைப் போற்றிடும் தமிழராய்
வாழ்ந்திடப் பெருமை கொள்வோம்
அனுதினம் தமிழ்தரும் அறிவால்
உயர்ந்திடப் புகழை அடைவோம்
நாளைய உலகினில் தமிழ்மொழி
வளர்ந்திடப் பணிகள் புரிவோம்
அறிவொளி ஏற்றிடும் சான்றோர்
மகிழ்ந்திடக் கொடைகள் அளிப்போம்.

இலக்கியச் சுவைநிறை கவிகள்
படைத்திடத் தமிழினைக் கற்போம்
நலம்பெறும் புதுமைகள் தமிழில்
பிறந்திட வழிகள் சமைப்போம்
எழுத்திலும் பேச்சிலும் தமிழே
தவழ்ந்திடச் சந்ததி வளர்ப்போம்
துளிர்விடும் வயதினில் தமிழில்
மிளிர்ந்திட நூல்களைக் கொடுப்போம்.

உயிரிலும் மேலாய்த் தமிழினை
பதித்திட உறுதி கொள்வோம்
தமிழால் நாளைய உலகினை
ஆண்டிடத் தலைமைகள் வளர்ப்போம்
கலைகளில் உறவாய் தமிழினை
இணைத்திட முயற்சிகள் செய்வோம்
உணர்வுகள் வெளிப்படும் கவிகளை
எழுதிடப் புதுக்கவிஞரை ஏற்போம்.






# நாளைய தமிழும் தமிழரும்

கவிஞர்:மன்னனூர்ப் பாரதி

தமிழராய்ப் பிறந்து பெருமைகள்
பெற்றிடப் புகழைச் சேர்ப்போம்
துயரே நேரினும் தமிழனாய்
மாய்ந்திட உறுதி கொள்வோம்
பணிகள் கடமைகள் தமிழால்
புரிந்திடச் சட்டம் அமைப்போம்
சாதிகள் பேதங்கள் முற்றாய்
ஒழித்திடத் தமிழனாய் எழுவோம்.

பண்பில் சிறந்த மனிதனாய்
திகழ்ந்திடத் தமிழனாய் வாழ்வோம்
சரித்திரம் யாவிலும் தமிழனே
நிறைந்திட எழுச்சி கொள்வோம்
மொழிகளில் மூத்தது தமிழேயென்று
உயர்த்திட முரசொலி இசைப்போம்
வழிவழி தமிழினை உயிராய்
போற்றிட உயர்வை அடைவோம்.

ஆதியும் அந்தமும் இல்லாத்தமிழை
வளர்த்திட ஆற்றல் பெறுவோம்
அற்புதமான இலக்கணத் தமிழைப்
பெற்றிடத் திருக்குறள் படிப்போம்
இசையுடன் நடனம் தமிழினில்
கலந்திடக் கலைகள் வளர்ப்போம்
உயிர் மூச்சினிலென்றும் தமிழ்மொழி
உறைந்திட உலகை வெல்வோம்.





# விடியலைத் தேடிடும் இரவு

-கிண்ணையூர் தமிழாதினி கிந்துயா.

புரியாத புதிராகப் புன்மை
இவளைக் கொல்கிறதே!
புயலாகச் சிலசமயம்
சிந்தையை வெல்கிறதே!
ஓயாத அலைவரிசையில் ஓங்காரமாய்
ஒரு சத்தம் - அதில்
ஓரளவு அமைதியும் அலையாய் விரிகிறதே!
சிறகுடைந்த சில்லூறு இவளின்
தீராத பாதையும்
தேராக மாறுமோ?

குற்றம் மட்டும் கூறித் தரம் தட்டிடும் சுற்றத்தில்
மாற்றம் என்று தான் தோன்றுமோ?
மனமுடைந்து நிலை தளர்ந்து நடைபிணமாய்
இருக்கும்
அற்ப நிலையின் அடிமைதானே இவள்
கால் உடைந்த நாற்காலி இவளின்
கதையும் என்றுதான் மாறுமோ?

சாதித்திடும் எண்ணம் கொண்டு இவளைத்
தேற்றினாலும்
சோதனைதான் வந்து வாட்டுகிறதே!
கை நிறையக் காசு இருப்பினும்,
காற்றடைத்த பையது தூசு படிந்துதான்
கிடக்கிறதே!
காம்பு கிள்ளிய காந்தல் இவளின்
கண்ணீரும் என்றுதான் தீருமோ?





# விடியலைத் தேடிடும் இரவு

-கின்னையூர்
தமிழாதினி கிந்துயா.

ஆசை கூறா அமாவாசை இவளின்
வாழ்வில்
தனிமையின் ஓசைதான் இனிமையும் தருகிறதே!
மழைத்துளியாய்ச் சிதறிய மங்கை இவளின்
மனதில்
ஆறுதல் எனும் அருட்கொடை என்றுதான்
கிட்டுமோ?
தேற்றிடத் துடிக்கும் மனமதின் தோற்ற
உண்மையை
என்றுதான் இந்த அற்ப உலகம்
புரிந்திடுமோ?

பொல்லாத உலகம் இது
பொய்ப் புரட்சியே செய்கிறது
புல்லாக இருந்தாலும் புயலாக மாற்றிவிடுகிறது
நிலைபெறா உறவை எண்ணித்
தனிமரமாய் நிற்கவும் செய்கிறது
உண்மையதை உரத்துச் சொன்னால்
ஊர்ப் பழிதான் மிஞ்சுகிறது
சக்கரம் உடைந்த சகடம் இவளின்
சரித்திரமும் என்று தான் பேசப்படுமோ...?



பிரிவில்
முடிக்க முடியாத உரையாடல்
கவிதை

புரிதலில்
என் உறவில் கலந்த உயிர்
கவிதை

காதலில்
தோற்க நினைக்கும் விளையாட்டுப் பிள்ளை
கவிதை

வாழ்க்கையில்
நான் எழுத முயற்சிக்காத போதும்
வாழ்வியலை மாற்றவந்த எழுத்துகள்
கவிதை.



# கவிதை

-தமிழ்மகள் சதுர்த்தி
வாழைச்சேனை.







# -தமிழ்மொழி வாழ்த்து-

வாழ்க நிரந்தரம் வாழ்க தமிழ்மொழி
வாழிய வாழிய வே!

வான மளந்த தனைத்தும் அளந்திடும்
வண்மொழி வாழிய வே!

ஏழ்கடல் வைப்பினுந் தன்மணம் வீசி
இசைகொண்டு வாழிய வே!

எங்கள் தமிழ்மொழி! எங்கள் தமிழ்மொழி!
என்றென்றும் வாழிய வே!

சூழ்கலி நீங்கத் தமிழ்மொழி ஓங்கத்
துலங்குக வையக மே!

தொல்லை வினை தரு தொல்லை யகன்று
சுடர்க தமிழ்நா டே!

வாழ்க தமிழ்மொழி! வாழ்க தமிழ்மொழி!
வாழ்க தமிழ்மொழி யே!

~சுப்பிரமணிய பாரதியார்.



